


ஸ்ரீ

கோமதிபுடர்ஜுனேசுவரர் ஸஹாயம்.

மஹாகணபதி துணை.

மாதாபிதா குரு ஸஹாயம்.

ஸ்ரீராமஜெயம்.

காமகள் கிருபையை முன்னிட்டு

# கோமதி அம்மன்

# தோத்திரப்பாமாலை.







இது

திருப்புடைமருதூர்

நா. பிச்சுமணியால்

தொகுக்கப்பட்டு,

ஸ்ரீமட்டுவார் குழலாம்பாள் ஆபீசில்

பதிப்பிக்கப்பெற்றது.

விலை அணா 4] 1922. [துந்துபி-ஸு










உ

ஸ்ரீகோமதி அம்மை துணை,

# நூன்முகம்.

## அறிவிற் சிறந்த பெரியோர்களே!

கவிசிரோன்மணியாகும் புகழேந்திப் புலவர் கூறியவண்ணம் அறிவிலனும். ஸங்கீதஞானம் எள்ளளவும் இல்லாதவனும். ஆங்கிலபாஷையிலும் மணமுமுள்ள நான் கீர்த்தனங்கள் எழுதப்புகுந்தனமுயற்சியானது, தாமரைத்தண்டின் நூலினால் மதயானையை யொன்றைக்கட்டி வசப்படுத்துவது போன்ற வீண் கேவலமுயற்சியேயாம். எனினும் நான்பிறந்த தலதேவதையின்பால் ஏற்பட்டுள்ள முதியபக்தியினாலும், பெரியோர்தண்ணளியால் கூடிய துணிபினாலும் என்னைப்போன்ற சிறுவர்களுக்குப்பக்தியூட்டி அவர்களோடு தினமும் லோகமாதாபிதாக்களாகிய கோமதி புடார்ஜுனேசுவரர்களைத்தோத்திரம் செய்யவேண்டுமென்ற பேரவாசைத்தெழுவதினாலும், சொற்சுவை பொருட்சுவை ராகம் தாளம்முதலியவழுவும் இக்கீர்த்தனங்களை எழுதப்புகுந்தேன்.

(குற்றமேகூறுவார் குறுமுனி
சொற்றபாவிலுமோர்குறை
தேடுவர்) என்றமுதுமொழிப்படி,

இந்தக்கீர்த்தனங்களில் குற்றம்பொறுக்கி எடுக்கப்புகுந்தால் அனைத்தும் பெருங்குற்றமாகவே விளங்கிடும். ஆகவே அன்னபெருவழுக்களையும் பொறுத்து மூடபக்குஞகிய அடியனேன் அறிவில்லாத்தன்மையினிருளினின்றும் ஒளிபெறுஞானத்தை விரகில் அடையும் வண்ணம் ஆசீர்வதித்து, கீர்த்தனைகளின்யாணபுக்காகவன்றி அவை ஸ்ரீமூலநாயகனுகிய ஸர்வேசுவரனையும் அவன் பத்னியையும் [illegible] யன என்றலூர் பெருமைக்காகவேனும் இக்கீர்த்தனைகளை அங்கீகரிக்கும்படி மேலவர்களை அப்பன்முறைபணிந்து வேண்டிக்கொள்கிறேன்.

திரு. நா. பிச்சுமணி.

இச்சிறுநூலை வெளியிடுதற்குற்ற பெருஞ்சிலவனைத்தையும் ஏற்றுக்கொண்டு ஆதரித்துப்பேரன்புபூண்ட மகா-ள-ள-ஸ்ரீ ஆர் சேஷசாயி (எ. ஏ ஐ இ இ. எலெக்டரிக் எஞ்சினீயர் திருசிராபுரம்) அவர்களுக்கு நான் என் ஆயுளுள்ளளவும் மனோவாக்குக்காயங்களால் கடமைபூண்டிருக்கின்றேனென்பதை கண்டுபுலப்படுத்துகிறேன்.

திரு. நா. பிச்சுமணி
ஆசிரியர்



காப்பு

சங்கரனே சிவகுமரனே என்றமெட்டு

1. கஜமுகனே கணபதியே
விக்நவிநாயகனே
பரமசிவன் பாலகனே
உமைமகிழும் அருமணியே. (கஜ

2. அருமறையின் அருபொருளே
சுவைதருஸத்குணபதியே
குணமணிகள் பூஜிதனே
வரம்பிகலும் வரமுகனே. கஜ

3. திக்குதோறும் அமர்ந்துமிகப்
பரிவுடனே அளிபெருகக்

கடனெனவே உறையோம்பி
திடமொடு நற்கருத்தூன்றும் (கஜ

4. பிணிநோய்கள் தீண்டாமல்
அணியறமே ஒருதிறமாய்
நலம்விளைத்து நாட்டினவர்
திகழ்விரிக்க வருள்புரிவாய். (கஜ

5. குணமறிந்து வாழ்வுநல்கி
குணமற்றார் குணமெய்தி
நெறிபுனைய வாக்கிமுறை
யறிவொளியின் சுடர்விரியாய். (கஜ

6. மறையோங்கச் சீலமதின்
திறமோங்க வந்தணர்தம்
அறமோங்க வளமோங்க
பக்தியோங்கக் கருணைபொழி (கஜ

7. நால்வருணம் முறைதொழில்கள்
மாயைமலம் படுவொழுக்கம்
ஆயமனத் தூய்மையினை
பெருகவேநல் வரமருளாய். கஜ

8. ஈரேழு உலகமெல்லாம்
சீருடைநன் னெறிவயத்தால்
ஆருரையால் போற்றும்பத
வீடுடையாய் கண்பாராய். கஜ



9. நீறணிபேர் வள்ளலுடன்
பாவைதனையும் பாடும்
தாழ்முயற்சி இடம்பெறவெ
பட்டார்ஜுனபுத்ரா வருளாய். (கஜ

நாமகள் வணக்கம்.

ராகம்—மோகனம். தாளம்—ஆதி.

பல்லவி

வாணி உன்னைப் பணிந்திடுசாலன்
நாவில்வாராயோ புகழ்பட

அநுபல்லவி

புஸ்தகதாரிணி வல்லபிகாருணி
குண்டிகாபரண பூஷணிநாயகி
பூர்ணசந்த்ரவிலாஸினி காந்திநீ
ப்ரதாபவித்யா குலதனகாரிணி வாணி

சரணம்

1. கைதவமில் பானவரகமியை வெண்டாமரையில்
செய்ய தவத்தந்தணர்தம் தண்மைபெருந்த
ஸத்கர்மத்தால் ஓங்கிடும்மெய்யரின்
முகமகிழலரென நாண்மலர்மீதினில்
ஸ்வயம்பரகாசமும் பொலிவுமிலங்கிட
நிர்மலவாஸினி கல்விசிகாமணி வாணி

2. வேதம்விளம்பிய வேதியன்பிரமனின்
தர்மஸ்வரூபிணி தர்மபத்னி
நாதம்விளங்கிட நீதிதிகழ்ந்திட
நீடியநூல்களு உன்னருளால் வாணி

குருவணக்கம்,

பேர்முனிவர் யாவரும் ஞானச்சுவைத்திரட்டை
ஓதமே வேண்டிநிற்க
பார்யோகநிலைதனை ஜீவர்க்குணர்த்தவே
எம்பிரான்கருணைகொண்டு
தக்ஷிணாமூர்த்தியா யருநிஷடைகொண்டுடன்

மாயமன்மனைச்சுட்ட
நிர்மாயதத்வமதை எந்நாளும் பணிவுடன்
கற்கவே காத்துநிற்போம்

## தோத்திரப்பாமாலை-12

1. ஒப்பற்றநாயகி சுந்தரி அகிலாண்டபரிபூரணி ஞானாம்பிகே
மேலோர்கள் ஸத்தென்னும் நெறியொன்று எம்மனம்
வதியவே காட்டிடாயோ,
பூவுலகில் கன்மவினை என்றுறை எனைச்சூழ்ந்த
படுபாபம் நீக்கிடாயோ,
ஸன்மார்க்க நிலைதந்து ஞானமெனு மொழிவீச
எனைமெய்யனாக்கிடாயோ
கருமங்கள் பலவற்றைக் காமமுதலாறு பகை
தீண்டாமற் காத்திடாயோ
ஆணவம் காமியம் மாயையெனு மும்மலம்.
அகலவே யோம்பிடாயோ
நித்தியானந்தமாய் இலங்குபெரு பதமீயப்
பேரருள்புரிந்திடாயோ
காருணீ சீர்மேவு புடைமருதூர் காத்தருள்
அன்னை மீகாமதி அம்மையே

2. தீர்ந்திடா மனநோயைப் பரிவுடனே தீர்த்திடும்
மணிமந்த்ர ஔஷதமும் நீ
தேர்ந்துமிக ஞானமெனுந் தீபத்தைத் தூண்டியே
இருளகலஒளிகாட்டும் நீ
ஓர்ந்துமிக நலத்தராய் ஆகவே முயல்கின்ற.
கல்வியின்பெருமுதலும் நீ.
வாணியெனு நாமமொடு வெண்டாமரைதனில்
தகைபெற உறைபவளும் நீ
தாணின்று தொழுதுமுறையிடுவோர்க்கு ஸத்குணம்
அருளுடன் படைப்பவளும் நீ
தாபங்கள் சோகங்கள் இன்னுபலகுறைகளும்
பாய்ந்திட வைமியு நீ

குறைவுபடும் குணவளமைபெருகவே ஊர்காக்கும்
புகழ்தலவாஸி நீயே,
காருணீ சீர்மேவுபுடை மருதூர் காத்தருள்
அன்னை கோமதி அம்மையே

3. தேவர்கள் இராஜனும் தேவேந்த்ரன் தன்வினையின்
பலவருஷம் நைந்துபட்டு
பவ்வமுறு நவ்வெனவே துயருறுங் காலையில்
தண்ணளி சொரிந்து காத்தாய்
புவியெலாம் பரவியே கால் வீச ஓங்குவெம்
அங்கியென ஜீவரெல்லாம்
கலங்கியே திகைத்திடும் அமையமதில் ஆலமதைத்
தானுண்ட முழு முதல்வன்
செல்வத் திருமேனி பகிர்ந்தவளே அங்கையால்
கண்டமதைப் பிடித்து வாங்கு
கொன்னஞ்சு செய்யசிர் தேகத்திலூடாது
இன்னுயிர் போற்றி நின்றாய்
பக்தியெனு முண்மையைப் பொய்யாக்கு மார்தரின்
பேதைமையாங் கேடு போக்கா
காருணீசீர் மேவு புடைமருதூர் காத்தருள்
அன்னை கோமதி அம்மையே

4. கரியொன்று ஆழ்மடுவில் நீர்பருக இழியவே
கரவடக் கராவதுற்று
துணைத்த கால்களைப் படுவாயில் பற்றியே
ஈர்த்துடன் கொண்டு செல்ல
மாயவுரு கொண்டவனுன் சோதரன் பரிந்துமே
இரக்ஷிக்க வரவில்லையோ
துன்மார்க்க மெனும்பகை எனைப்பற்றி நின்பாதச்
சிந்தனையை யறுக்குங் காலை
பொறிஐந்தின் வழிபேகும் வன்மன மடக்கவே
திறனன்றி நிற்குங் காலை
மண்மாது பொன்னெனும் மூன்றிலும் மிதமற்ற

ஆவலது கொள்ளுங் காலே
தெரியும் தோமற் கவறியும் புகுகின்ற
தீமைவலே கவருங் காலே
அன்னையே யென்றழைக்க வாராயோ என்னிடர்
தீராயோ சிவசங்கரி
காருணீ சீர்மேவு புடைமருதூர் காத்தருள்
அன்னே கோமதி அம்மையே

5. முத்து மாலேகளும் மரகதக்கற்களும்
பொன்மேனி பொலிவு கொள்ள
திவ்யாபரணங் களாய்ச்சிர முதல் பாதம்வரை
மேன்மையாயலங்கரிக்க
பீதாம்பரங்களும் பொன்னுடை வரிசைகளும்
ஸம்ப்ரமம் காட்டி நிற்க
மகர தோரணங்களும் வாசமலர் மாலேகளும்
திகழுடல் தனி விலங்க
பொன்வெள்ளி தண்டுகள் சிங்கார மாகவே
தொடர்ந்து உன் பெருமை நாட்ட
அன்னமயிலிவையன்ன வாஹனந்தனிலூர்ந்து
திருக்கோல வெழுச்சிநாளில்
இறும்பூது எய்தியே ஆநந்தக் கடலூற்றேன்
அன்னையே என விளித்தேன்
காருணீ சீர்மேவு புடைமருதூர் காத்தருள்
அன்னே கோமதி அம்மையே

6. மேலேநாள் அசுரர்கள் தேவர்பலர் துயருறவே
பலதீமை புனைந்தபோது
வேலேநடு வடவாமு காக்கினிபோல் காதித்து
ஸம்ஹாரம் செய்ய வெண்ணி
சக்திஸ்வ ரூபமாய் ரதமேறி வில்லேந்தி
போர் புரியும் கோலமாகி
வஞ்சகரை வதைத்தவொரு வீரநிலே தன்னழகைச்
செப்பமுடன் சொல்லப்போமோ

கொடுமுடியின் பனிவரையில கல்லிலும் முள்ளிலும்
ஊணின்றி உறக்கமின்றி
மேனியை மிகவாட்டி ஒருநிலையிலியற்றுதவப்
பேரழகைச் சொல்லப்போமோ
காமசுந்தரியாகி ரமணனுடன் கொலுவிற்றும்
திருவழகு சொல்லப்போமோ
காருணீ சீர்மேவு புடைமருதூர் காத்தருள்
அன்னை கோமதியம்மையே

7 எனவென்றியம்புவேன் நின்கொலுவிருக்கையை
நின்னன்பின் தீவிரத்தை
கணவனின் மிக்கவொரு தெய்வமில்லுண்மையை
பூவினருணரவேண்டி
தனயன்செய்வேள்வியும் தவிர்ந்து நின்றேபெரும்
நாதன்பால் வைகலுற்றாய்
செஞ்சடையன் மேனியில் இடபாகம் பகிர்ந்துநீ
கற்பொண்மை புலனாக்கினாய்
அன்புருவ மானமதி சூடிதன் பாகியாய்
ஒன்றியே பேறு பெற்றாய்
ஒழுக்கமில் மக்கள்தாம் பக்தியெனும் படியேறித்
தவமெனும் மதிலிவர்ந்து
ஒப்பிலா ஆனந்தம் எம்பெருமானடிகளில்
ஒன்றும்வகை காட்டினாயே
காருணீ சீர்மேவு புடைமருதூர் காத்தருள்
அன்னை கோமதியம்மையே

8 காரொப்ப நீரினைப் கைம்மாறு வேண்டாது
மழைக்கருணை பொழியுந்தாயே
அமுதமொழியளே தேனிசையும் ஸங்கீத
இன்சுவையு மற்றுமுள்ள
எக்கவியு மெத்திறனு முனைப்பாடவல்லதோ
உனை முழுதுமறியாமலே
ஆரியவேதம் நான்கும் மருள்கின்ற நிலையையில்-

மாந்தரோ அறியவல்லார்
வேதியர் குலந்தனில் தோன்றினும் வேதத்தின்
ஒருதிவலே அறியா மலே
தொன்மையாம் சீர்நெறித் தவநிதிகள் வம்சத்தில்
தோன்றினும் தீது மாருப்
புன்மைக்கு மெட்டுமோ நின்திரு விலாஸமது
செய்பவிரை கமலக் கண்ணுய்
புன்மைதனே மாற்றிநின் னுண்மைதனே யறிந்துநல்
பேறுபெற வருள வாராய்
காருணீ சீர்மேவு புடைமருதூர் காத்தருள்
அன்னே கோமதி யம்மையே

9. எவ்வுயி ரகத்திலும் மெய்தவமும் பக்தியும்
குடிகொள்ளில் காலன் நாடு
பேரின்றி ஒய்ந்திடுங் கூற்றுவ னுந் தாமுமென்
றுன்னியே மன மிரங்கி
பாபமெனும் பெருவளியைப் புவியெலாம் உட்கொண்டு
நேர்மைபட வாக்கினுயோ
பத்தும்ப றக்கவே வறுமையெனும் கொடுநோயை
வரையற்று விரவினுயோ
அனுபவ முதிர்ந்தனவும் நற்கதியிலுய்ப்பனவு
மான முறை:வீதலாமோ
எப்பொருளு மெவ்வுயிரு முன்னேயே போற்றிடின்
ஆருயிர் உவகை பூக்கும்
அல்லாமல் இகமோடு பரத்திலும் பயனிலே
தருணமிது பரிவு கொள்ளாய்
காருணீ சீர்மேவு புடைமருதூர் காத்தருள்
அன்னே கோமதி யன்னேயே

10. திரிலோக நாயகீ எனும்பெயர் பூண்டநீ
வாளாயி ருத்தல் தகுமோ
மக்களின் துயர்கண்டு வாடியமு கம் மலர
இயக்குவது கடமை யல்லோ

அந்தணர் வேள்வியும் நிலமன்னர் தாமோச்சும்
செங்கோலுங் கோடி மாய
ஒளியாது பெருவளமை அஃகமுதலாயிந்த
பூதேவி மிடியுமேந்த
வருணமத பேதமிவை வாளாகிஒன்றுமனம்
வெம்பகையின் கலகம்பூண
விண்படா டோபமேனும் பைசாசம் உலகினரை
ஒள்மனம் திரித்து உய்க்க
நீதியெனும் வேர்பட்டு வீழ்மரந்தினைக்கவே
கருணையெனு மழுதுமொழியாய்
காருணீ சீர்மேவு புடைபருதூர் காத்தருள்
அன்னைகோமதி அம்மையே

11. வள்ளண்மை பூண்டபெருஞ் சோதியேமாங்கள்.
வைஷ்ய ஈசுவரிஉன்
வடிவமதை நெஞ்சிற்பதித்துமே அகங்கனிய
நினைவார்க்குஇல்லைநரகு
பேதையர்க் குணர்வெனுந் தீமழுது ஊட்டவே
அர்ச்சையில் எழுந்தஉன்பால்
தத்தமுறைவழுவாது செய்கடன்முடித்து உன்
னடைக்கலம் புகுதலில்லார்
மக்களால்நேரிடும் பெருமுதவிஎய்தினும்
முடிவீடுஉய்வரோகாண்
தக்கணத்திசையினில் காசியென மேய்படும்
திருத்தல மெழில்செய் தாயே
உன்னையே தொழுநான் மேலவர் உறுகதியை
யடையவே முயலவருளாய்
காருணீ சீர்மேவு புடைமருதூர்காத்தருள்
அன்னை கோமதியம்மையே

முடிவுரை

12 அடுத்து முயன்றுலும் ஊர்க்குருவி பருந்தாதல்

எங்கனுங்காண்டவில்லை
நந்நடுவே தோன்றினும் கமழ்தாமரையாக்குமோ
அனுகொணப்பதரின்செறிவு
பொருணயம் சொன்னயம் பெருவரைச்சிகரமதில்
ஒளிர் தூய விளக்கு மான
இலங்குதமிழ்ப் பாடலும் ஒப்பிறையும் கிரந்தமும்
நின்புக ழுளாவி நிற்க
என்சிறு முயற்சியால் உரைஎளிய பாடலது
நின்செவிக் கிதமாகுமோ
அன்றாயினும்தாயே என்பனக் குறைபுகலப்
பணிவெனும்வாயிலால்நான்
உளறினேன் மதலைபோல் பிழைபொறு நின்பதச்
சிந்தைதனில் வதிய அருள்வாய்
காருணிபுடார் ஜானன் பாவையே சந்ததமும்
நின்பதம் நினைந்துவாழ்வேன்

முற்று பெற்றது.

ஸ்ரீ ராமஜெயம்

மங்களம்.

எண்ணரிய ஒண்மைதகை நான்மறையுமோங்க
எண்ணிறையு நீதிபல கொழுமுளையினோங்க
விண்ணுறையுமுன்னவர்கள் தூயவியல்போங்க
விண்ணுறையுங்கண்ணருளும் மங்களமுமோங்க

பக்தி.

ஸ்ரீ கோமதி ஸகாயம்
(அகவல்)

1 ஆர்கலி சூழ்ந்த அவனியில் வாழும்
மாந்தர்க் கெல்லா மாபெரு மைத்தாய்

இடையூ றின்றி இகபர மிரண்டும
பேர்மகிழ் வியக்கும் ஆர்மதி பக்தி
மெய்யுணர் வில்லா மேதினி வாழும்
உயிர்வெம் பாலைப் பயிர ழிவனபோன்
அறுகோண் மாயா வுறுகே டுற்று
அழிவெனு மடுவில் ஆழவே விரையும்
எனவே வல்லீர் தனவலி யாலும்
சுவைமிகு ஒண்மைக் கவிபல வாலும்
அகநா வுடலெனுந் தகைமூ ன்றாலும்
ஊக்கங் குன்றா தாக்கம் பலவாய்
நாடுமி னூர்ந்தே தேடுமின் தெய்வத்
திருப்பணி யேயொரு தனிப்பணி யாய்நல்
முடிஇல் லாளும் அடுமல மாய்க்கும்
பாம்பொரு ளடியை உறுமின் மிகவே

திரு. நா பிச்சுமணி

## ஸ்ரீ வெங்டாஜலபதி வணக்கம்.

ராகம்- தோடி தாளம்ஆதி

### பல்லவி

ஸ்ரீபதே கோபாலா— வேங்கடநாயகா —பாலனுக்கருள்
செய்வாய்—மாதவா ஸ்ரீபதே

### அனுபல்லவி

சாலவிங்கிதமாய்—பல்லினஞ்சேர்நல்ல—உதயநேரி
தன்னில்—அமர்வடபத்ரசயன ஸ்ரீபதே
ஆதியந்தமில்லாத—வேதவுருவும்நீயே—
ஜோதியாம்திருத்தூணில்—உதித்தபெருமான்நீயே
நாடிசிவனைக்கார்க்க பத்மாசூரனைக்கொன்றாய்
[illegible]
கார்வ்வாயே நாயகா என்மனும்புஜவாஸா ஸ்ரீபதே

ராகம்—தோடி-தாளம் ரூபகம்

பல்லவி

ஈசாஉந்தன் பாதம்போற்றினேன் பரமபதத்தை
ஆளவேதிரு ஈசா

அநுபல்லவி

நாறும்பூநாதா தொண்டர்க்கிறைவா நாளும்முந்தன்
திருவினைந்தேன்
அழிவிலாத மறைகள்போற்றும்
நீடியபுகழ்-சூடியநாதா ஈசா

சரணம்

காசினியில்பல தலங்களுள்ளும், தென் காசியெனவே
நாமம்பூண்ட, சீர்திருப்புடை மருதூரதினில்,
வாழ்நலபதி புடார்ஜுனபதே ஈசா

ராகம் காபி தாளம் ஆதி

பல்லவி

ஈசனேஉந்தன் கழல்பணிந்துறைவேனே
அநுதினமும் ஈசனே

அநுபல்லவி

அடியவர்க்கருளும் காரியைநீரா
எந்தன்சிந்தாமணிகணநாதா ஈசனே

சரணம்.

நிர்மலஸத்ஜன பரமஸஹாயா
கன்மவினைதனை நீக்குமுபாயா
கோமதி மிகமகிழ் ஆலசிவாயா
ஸச்சிதாநந்தஸ்வரூபகுணயா ஈசனே

2. நீறுபூசியே ஏறினில்வருவாய்
அராவுசூடியே பிறைமதியொளிர்வாய்
கங்கைபுனைந்திடு பெருஞ்சடைஈசா
துகளணிஅடிந்திடும் தொண்டர்தம்தாஸா

3 புடைமருதூர் தொன்மறை புகழ்தலமதை
தடையென்தீவினை மடியமேவகாராய்
பேர்முனிவர் பொழிதேன் மறைதாமா
பாடும் வள்ளால் புடார்ஜுன நாமா ஈச

ஸ்ரீராகம் தாளம் ஆதி

பல்லவி

தனிநாயகி தாயே கோமதி குணரூபி அன்னாய்
வெம்புண்ணாற்றுமேயா

அனுபல்லவி

வேதமூலமே துதிசெய்பாதமே
தீகடிகோலமே மெய்நெறி சீலமே

சரணம்

நலம்நிறைவிரதம் புனைதருமனத்தாய்
தலமுறு முறைவழு கொடுமனப்பிலத்தாய்
சிரமுறுவிடமியை அந்நெறி இலக்கை
அழியமேயருளுவாய் புடார்ஜுனபதிபூவாய்

ராகம் பூரிகல்யாணி தாளம்ஆதி

பல்லவி

நாயகிஎம்மை அன்புடன்காப்பாயே
தாரகமேவேறில்லை சேரகம்நீயே

அனுபல்லவி.

சொல்புரியாள் அருளுருவே
அகிலாண்டம்போற்றும் தேவி கோமதி நாய

சரணம்.

வேண்டினேன் உன்னை வேண்டார் துறவு
வல்வினைதனை மாற்றுயோ தாயே
ஆண்டியாய்வந்தேன் ஸர்வேசுவரி
அருள்புரிவாயே புடார்ஜுனன்மகிழ்       நாயகி

புவநிதாஸுடநி — என்றமெட்டு

பல்லவி.

அம்பிகே உன்னைப் பணிந்தேற்றினேன்
நம்பிவந்தேனெனை ஆதரிப்பாயே       அம்பிகே

அனுபல்லவி.

இது தர்மமோ தாயே ஈசுவரி முது தர்மமுரு
அம்பே- புன்மனமாள்வாயே       அம்பிகே

சரணம்

வாடிவாடிமனம் நாடிநாடிஅகிழ்— சூழுமூழ்பற்றியே
பாழிலாழ்கதியை— தேடித்தேடிமகிழ் கூடும் வீடுதனை
கூடக்கண்பாராய்— புடார்ஜுனன்பூவாய்       அம்பிகே

ராகம் மோஹனம்

க்ஷேமம்கொடு கோபால— என்றமெட்டு

பல்லவி.

தீபம்தூண்டாய் அம்பிகே- கோமதி- தாபம்தீராய்ஈசுவரி

அனுபல்லவி.

நல்லுலகம்பெறு வழிமாறிஉறுமிக புல்லுலகம்நாடும்
கெடுகுணம் கடியாயோ       தீபம்

சரணம்.

நாடிய பாபங்களெனும் அடுபதரின் நீடிய
1 இடரில் மனமாய— மெய்யே— கோடியவிடமுண்டு
நெறிவீய— தேடியதூய்புனல் துறைபல வாடியும்—
கூடியபல கணத்திறைமிகப்பாடியும்— மடியாத
மலமூன்றில் மனமடைந்திடைப்பதை—
படியவே வயலுறைவாய் புடார்ஜுனபதிபாவாய்       தீபம்

ராகம் காதனாமக்ரியை தாளம்—ஆதி

பல்லவி

நேராகவருவாயே கோமதி—இடபத்தில் வருசிவன்
இடபக்கம் பகிர்தேவி நேராக

கண்ணிகள்.

1. வேதங்கள்புகழ்ந்திடும் பாதங்கள் அடையவே
தாரகம் நீயேஎன்றேன் தாபத்துடனேவேண்டும் நேரா.

2. தாயேமனம்பரிந்து நீயசினம்உதைப்பாய்
தூயபணிவுசுந்து ஆநந்தபக்தியூட்டாய் நேராக

3. த்ரிபுரஸுந்தரி அகிலாண்டஈசுவரி
தேவி காமாக்ஷி என்மேல்கடாக்ஷம்ஒளிர்வாயே நேராக

4. தொன்னெடு நகம்போலும்நன்னெறிமேலிலங்கும்
தன்னிகரில் மூறையின் எந்தலந்திகழுற நேராக

5. பதரெனும் வாழ்வதைச்சிதறெனும் பவம்பற்றும்
வதமாறிநலமென்னும் ஹிதமதைத்தருவாயே நேராக

6. தாம்புனல்புறஞ்சூழத் தீம்புனல் பருகியே
சால்வளம் நிறையூரின் ஆர்குணம்பெருகவே நேராக

7. கொடுமுடிதனில்நின்று நெடுதவப்புகழ்வென்று
புடார்ஜுனனை மணந்தசக்திஸ்வரூபிநீயே நேராக

பணிவாய்ஒர் விஞ்ஞாபனம்.

லக்கண லக்கியங்கள் தக்கவை பயிலாப்பேதை
மிக்கவன் றுணிபினேடி யக்கிய பாடறன்னை
மிக்கரே பொறுமையென்னுஞ் சிக்கறு வரணிகொண்டு
மிக்கவே குறைகணிக்கி யடியனை யளியின்பாரீர்.

திரு-நா-பி.

தத்தமது தொழிலோம்பி தத்தமுறை வைகும்
சுத்தநிலை பூவாழுஞ் சித்தர்மிசை வைக
பத்தியெனு மொண்மலரின் சித்தியாம்பேரின்பம்
எத்திசையு மெவர்கண்ணு மெத்தநலம்பூண.

சுபமஸ்து

ஜெயம்,

காமாக்ஷி ஸகாயம்.



ஊதியத்தின் பெரும்பாகம்

சகஜனசைலாயமாய திருப்புடைமருதூர் சோமவாரஸிவனால் தொடங்கப்பெற்று நிலைபெற்றுவரும் பஜனதர்ம மடபரிபாலன நிதிக்காக அளிக்கப்படுதலால், விலைசிறிதும் மிகையென்று தோன்றினும், கனவான்கள் அதினைப்பொருள்செய்யாதிருப்பீர்களெனக் கோருகிறேன், ஏனெனில் தாமஸ்தாபனமே விரதமாகவுடையவர்கள் சிறிதுவிலை ஏறத்தாழ்வைக் கவனியார்களே.

இயற்றுதற்கருத்தா

---

இப்புத்தகம் கிடைக்குமிடம்.

திரு-நா- பிச்சுமணி

கோமதி புடார்ஜுன விலாஸம்

திருப்புடை மருதூர்

வீரவநல்லூர் போஸ்டு.

திருநெல்வேலி ஜில்லா

(அல்லது)

திரு-நா- பிச்சுமணி

பீ-ஏ-ஸீனியர் கிளாஸ்

ஸெண்ட் ஜோஸெப்ஸ் காலேஜ்

தெப்பக்குளம் போஸ்டு

திருச்சிராப்பள்ளி.

---

என்ற இயற்றுதற்கர்த்தாவின் விலாஸங்களுக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளவும்.